Regd: No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6-TN-Ms C. P. P 55



**சகாப்தம்**

சாமானியர்களின் சகாப்தம் இது. ஏழை எளியவர்களின் எண்ணங்கள் ஈடேற்றப் படும் காலம் இது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**வாழ்க்கை**

வாழ்க்கை அவனவன் வாழ்வதற்கு என்று மட்டும் கருதக்கூடாது. மற்றவர்கள் நலனுக்கும் என்று கருதுக.

-தந்தை பெரியார்



மலர்: 9 சென்னை 9-3-1985 சனி ★ ★ ★ வெளியூர் 10-3-1985 ஞாயிறு இதழ் 141

## ★ அன்னை இந்திரா மறைவுக்கு சட்டப்பேரவை - மேலவை அஞ்சலி

## ★ இரங்கல் தெரிவித்து சபை நிகழ்ச்சிகள் தள்ளிவைப்பு

# சட்டசபையில் இந்திரா படம்



## விரைவில் திறக்க அரசு முடிவு

**சென்னை, மார்ச் 9- அன்னை இந்திரா காந்தி மறைவுக்கு தமிழ்நாடு சட்டப்பேரவை, மேலவை அஞ்சலி தெரிவித்து தீர்மானம் நிறைவேற்றின. இந்திரா மறைவுக்கு இரங்கல் தெரிவித்து சபைகளில் நிகழ்ச்சிகள் தள்ளிவைக்கப்பட்டன. சட்டப்பேரவையில் இந்திரா காந்தியின் திரு உருவப் படம் விரைவில் வைக்கப்படும் என்ற அரசின் முடிவை அவை முன்னவர் டாக்டர் நாவலர் அறிவித்தார்.**

பிரதமர் இந்திராகாந்தி மறைவு குறித்து இரங்கல்தீர்மானம் இன்று சட்டப்பேரவையில் நிறைவேறியது. இரங்கல் தீர்மானத்தை அவைமுன்னவர் டாக்டர் நாவலர் முன்மொழிந்தார்.

### உலக அரங்கில் அன்னை இந்திரா

இரங்கல் தீர்மான விவரம்:-

இந்தியப்பெருநாட்டின் புகழுக்கும், பெருமைக்கும் உரிய தலைமை அமைச்சராய் திகழ்ந்தவரும், இந்திய மக்களின் அன்பையும், ஆதரவையும், வரவேற்பையும் பெற்று வரும்உலகஅரங்கில் இந்தியாவின் பெருமையையும், புகழையும், உயர்த்திச் சென்றவர் இந்திரா.

நாட்டில்ஒருமைப்பாட்டு உணர்வு ஓங்கவும், ஜனநாயக முறையும், பண்பும் வளரவும், பாதுகாப்பு வலிவு பெறவும் அரும்பாடுபட்டு வந்தவர் இந்திரா. மன்னர் மானியத்தை அறவே ஒழித்து முழு மக்களாட்சி முறைக்கு வழி கோலிய அவர் நாட்டின் பொருளாதார மேம்பாட்டிற்கு உறுதுணை புரிகின்ற வகையில் பெரிய வங்கிகளை நாட்டுடைமையாக்கி, சமுதாயத்தின் அடித்தளத்திலுள்ள ஏழை எளிய மக்கள் நல்வாழ்வு பெற வேண்டியும் சமுதாயம் வளர்ச்சி பெறவும் 20 அம்சதிட்டத்தை உருவாக்கி அதனைநடைமுறைப்படுத்திக் காட்டியவர்.

1983 ஆம் ஆண்டில் 100க்கு மேற்பட்ட அணிசேரா நாடுகளை ஒன்று சேர்த்து அவற்றின் ஆட்சித்தலைவர்கள்அடங்கியமாநாட்டை புதுடெல்லியில் சிறப்பாக கூட்டி அதன்தலைமைப்பொறுப்பையும் ஏற்று வெற்றிகரமாக நடத்திக்காட்டியவர்.

அதே ஆண்டில் 40-க்கு மேற்பட்ட காமன்வெல்த் நாடுகளின் தலைமை அமைச்சர்கள் மாநாட்டை புதுடெல்லியில் கூட்டினார்.

### ஐ.நா. பேருரை

1983ல் ஐ.நா. அரங்கத்தில் பேருரை நிகழ்த்தி அகில உலகதலைவர்களின் பாராட்டுக்களையும் நம்பிக்கையையும், நன்மதிப்பையும் பெற்று 15 ஆண்டுகாலத்திற்கு மேலாக நாட்டை நன்முறையில் வழி நடத்தி இந்தியாவின் புகழை நிலை நாட்டினார்.

ஆசிய விளையாட்டுப் போட்டி பந்தயத்தை நடத்திக் காட்டி இந்தியாவின் செயல் திறனை நிலைநாட்ட அயராது பாடுபட்டவர். தம்முடைய அறிவுத்திறன் ஆற்றல்திறன், பண்பாட்டுத்திறன், செயலாற்றும் திறன், மனஉறுதி, விடா முயற்சி, ஆகியவற்றால் தாய்நாட்டுக்கு தொண்டு புரிவதையே தம்முடைய வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டிருந்தார்.

### அதிர்ச்சி துயரம்

புதிய பொலிவு மிக்க இந்தியாவை உருவாக்க தம் வாழ்க்கையையே ஈந்தார். இந்திய மக்களின் ஒரு பெரும் தலைவராக விளங்கிய இந்திரா காந்தி அம்மையார் 84-ம் ஆண்டு அக்டோபர் 31-ம் நாள் கயமை பண்புக் கொண்ட வன்முறைக் கொடுமையாளர்களின் கோரப் படுகொலைக்கு இரையாகிவிட்டார் என்பது இந்த அவையினருக்கு பேரதிர்ச்சியையும், பெருந்துயரத்தையும், பெருந் துக்கத்தையும் அளிப்பதாகும்.

### இந்தியா இந்திரா

இந்திராகாந்தி அம்மையார் இந்தியாவுக்காகவே வாழ்ந்தார். இந்தியாவுக்காகவே மறைந்தார். சாதி, மதம், இனம், மொழி, நிறம் போன்ற வேறுபாடுகளையெல்லாம் கடந்து நின்று நாட்டின் ஒற்றுமையைக்காக்கபெரு முயற்சிகளை மேற்கொண்டார்.

இந்திரா காந்தியின் எதிர்பாராத மறைவு உலகப்பெருந் தலைவர்கள் அனைவரையும் அதிர்ச்சிக்குள்ளாக்கியது. உலக நாடுகள் அனைத்தையும் துக்கத்தில் ஆழ்த்தியது. உலக மக்கள் அனைவரையும் கலங்க வைத்தது.

மறைந்த இந்திரா காந்தி அம்மையார் கொண்டிருந்த உயர்ந்த குறிக்கோள்களை நடைமுறைப்படுத்துவதும், எல்லாத் தரப்பினரும் ஏற்றுக்கொள்ளும் தன்மை கொண்ட சிறந்த திட்டங்கள்அனைத்தையும் செயல் முறைப்படுத்துவதுமே இந்தியாவிலுள்ள அனைவரின்நீங்காகடமையாகும்.

ஆற்றொணா துக்கத்திலும், துயரத்திலும் ஆழ்ந்திருக்கும் அவரது அருமைச்செல்வரும், இந்தியாவின் தலைமை அமைச்சருமான ராஜீவ் காந்திக்கும், அவரது குடும்பத்தினருக்கும் இந்த அவை தனது ஆழ்ந்த வருத்தத்தையும், இரங்கலையும், பரிவையும், தெரிவித்துக்கொள்கிறது.

இவ்வாறு அந்த இரங்கல் தீர்மானத்தில் கூறப்பட்டுள்ளது.

### மேலவை இரங்கல்

தமிழக சட்டமேலவை இந்திராகாந்திமறைவுக்கு அஞ்சலிசெலுத்தியது.

மேலவை உறுப்பினர் மதுரை முத்தண்ணன் மறைவுக்கும், முன்னாள் உறுப்பினர் ராஜாராம் நாயுடு மறைவுக்கும் கே.

### இந்திரா உருவப்படம்

இந்திரா நினைவாக அவரது திருவுருவப்படம் பேரவை மண்டபத்தில் விரைவில் திறந்து வைக்கப்படும். அரசின் சார்பில் இதை தெரிவித்துக் கொள்கிறேன் என்று நாவலர் கூறினார்

சபாநாயகர் பி. எச். பாண்டியனும் இந்திராகாந்திக்கு இரங்கலைத் தெரிவித்துக் கொண்டார்.

டி. கோசல்ராம் மறைவுக்கும் மேலவையில் இரங்கல்

2-ம்பக்கம் பாாக்க

இ. காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்கள் கூட்டத்தில்

# புதுவை முதல்வராக பரூக்ஒருமனதாகதேர்வு

**பாண்டிச்சேரி, மார்ச் 9- எம்.ஓ.எச்.பரூக் மரைக்காயர் புதுவை மாநில முதல்வராகிறார் பாண்டிச்சேரியில் இன்று நடந்த இ. காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள் கூட்டத்தில் சட்டமன்ற கட்சித் தலைவராக பரூக் ஒருமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார்**

புதுவை மாநில சட்டமன்றத்திற்குப் புதிதாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள இந்திரா காங்கிரஸ் உறுப்பினர்கள் கூட்டம் இன்று காலை பாண்டிச்சேரியில் நடந்தது.

இக் கூட்டத்தில், இ. காங்கிரஸ் மேலிடப் பிரதிநிதிகள், அஜித் பஞ்சா, மனோரஞ்சன், ஜி. ஆர். க.. புதுவை மாநில இந்திரா காங்கிரஸ் தலைவர் பி.சண்முகம் ஆகியோரும் கலந்து கொண்டனர்.

### பரூக் தேர்வு

இக்கூட்டத்தில் புதுவை சட்டமன்ற இ. காங்கிரஸ் கட்சித் தலைவராக, எம்.ஓ.எச். பரூக்மரைக்காயர் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

புதுவை மாநிலத்தின் முதல்வராகவும், சட்டமன்ற சபாநாயகராகவும் பணியாற்றியவர் பரூக்.

சபாநாயகர் பதவியை ராஜினாமாசெய்துவிட்டு, சட்டமன்றத் தேர்தலில் லாஸ்பேட்டை தொகுதியில் போட்டியிட்டுவெற்றி பெற்றார்.

### புரட்சித் தலைவருக்கு நன்றி

புதுவையில் இ. காங்கிரஸ் அமைச்சரவை அமைய முழுஒத்துழைப்பு அளித்த தமிழக முதல்வர் எம்.ஜி.ஆருக்கு நன்றி தெரிவித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### ஆந்திர முதல்வராக ராமராவ் பதவி ஏற்பு

செகந்திராபாத், மார்ச்9- ஆந்திர மாநில முதல்வராக என். டி.ராமராவ் இன்று பதவி ஏற்றார். இந்த பதவி ஏற்பு விழா செகந்திராபாத்தி லுள்ள ராணுவ திடலில் நடைபெற்றது. ராமராவுக்கும், அவரது அமைச்சரவை சகாக்களுக்கும் ஆளுனர் சர்மா பதவிப் பிரமாணமும், ரகசிய காப்பு பிரமாணமும் செய்து வைத்தார்.

ராமராவ் தலைமையிலான புதிய அமைச்சரவையில் 24 பேர் இடம் பெற்றுள்ளனர். இந்த பதவி ஏற்புவிழாவுக்கு ஏராளமான மக்கள் வந்திருந்தனர்.

உலகசாம்பியன் கிரிக்கெட்

### 3-வது இடத்தை மேற்கிந்திய அணி பிடித்தது

மெல்போர்ன், மார்ச் 9— உலகச் சாம்பியன் கிரிக்கெட் போட்டியில் 3-வது இடத்திற்கான போட்டி மேற்கு இந்திய அணிக்கும், நியூசிலாந்து அணிக்கும் இடையே நடந்தது.

இதில் மேற்கிந்திய அணி வெற்றி பெற்று 3 வது இடத்தைப் பிடித்தது.

இறுதிப்போட்டி நாளை நடைபெறுகிறது. இதில் இந்திய அணியும் பாகிஸ்தான் அணியும் மோதுகின்றன.

★ புரட்சித்தலைவர் நலம்பெற தேவைப்பட்ட உதவிகளை அளித்த அன்புள்ளம்:

## இந்திய ஜனநாயகம் தொடர்ந்து 'காப்பாற்றப்பட

# 'இந்திராகாந்தி விட்டுச் சென்ற பணி தொடருவோம்'

## சட்டபேரவையில் டாக்டர் நாவலர் புகழஞ்சலி

**சென்னை, மார்ச் 9- 'இந்திய ஜனநாயகம் தொடர்ந்து காப்பாற்றப்பட இந்திராகாந்தி விட்டுச்சென்ற பணிகளைத் தொடருவோம்' என சட்டப்பேரவையில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.**

தமிழக சட்டப்பேரவையில் இந்தியாவின் முன்னாள் பிரதமர் இந்திரா காந்தியின் மறைவுக்கு இரங்கல் தெரிவித்து நிதி அமைச்சரும், பேரவை முன்னவருமான டாக்டர் நாவலர் கூறியதாவது:-

இருபதாம் நூற்றாண்டில் உலகம் முழுவதும் 79 அரசியல் படுகொலைகள் நடைபெற்றுள்ளன. ஆனால், 1948ம் ஆண்டு ஜனவரி 30ந் தேதி நடைபெற்ற மகாத்மா காந்தியின் படுகொலையும், அதன்பிறகு 1984ம்ஆண்டு அக்டோபர் 31ந் தேதி இந்திராகாந்தி படுகொலைசெய்யப்பட்டதும் உலகையே குலுக்கியதாகும்.

உலகில் பகைவர்கள் பதவி வெறி பிடித்த படைத் தலைவர்களைப் படுகொலை செய்வதுண்டு ஆனால் பாதுகாப்புக்காக இருந்த பாதுகாவலர்களாலேயே சுட்டுக் கொல்லப்படுகிற அதிர்ச்சி இந்திராகாந்தி சம்பவத்தில் நடைபெற்றது.

தன்னை பாதுகாக்க நியமிக்கப்பட்ட பாதுகாப்புபடையைச்சேர்ந்தவர்களேபடுகொலை செய்வது என்பது பேரதிர்ச்சியைத் தருவதாகும்.

பண்டிதநேரு ஏற்றிவைத்த ஜனநாயக ஜோதியை அணையாமல் பாதுகாத்தவர்இந்திராகாந்திஅம்மையார் அவர் பிறக்கும் போதே அரசியல் புகழ்பெற்றவர். அரசியல் சூழ் நிலைகளிலேயே வளர்ந்து, அரசியல் சூழ் நிலையிலேயே மறைந்

2-ம் பக்கம் பாா்க

இ. காங்கிரஸ் ஆட்சிக்கு ஒத்துழைப்பு தருவோம்

# புதுவை அமைச்சரவை: கழகம் இடம் பெறாது என முதல்வர் அறிவிப்பு

## இ. காங்கிரஸ் தலைவர்கள் புரட்சித்தலைவரை சந்தித்து ஆலோசனைப் பெற்றனர்

**சென்னை, மார்ச் 9- புதுவை அமைச்சரவையில் கழகம் இடம் பெறாது என முதல்வர் புரட்சித்தலைவர் தெரிவித்துள்ளார். புதுவையில் அமைச்சரவை அமைப்பது குறித்து இந்திரா காங்கிரஸ் தலைவர்கள் முதல்வர் புரட்சித்தலைவரைச் சந்தித்து ஆலோசனை பெற்றனர்.**

புதுவைமாநிலத்தில் அமைச்சரவை அமைப்புப் பணிகள்குறித்து நடவடிக்கைகளை மேற்கொள்ள இந்திரா காங்கிரஸ் கட்சி மேலிடம் அஜித் பஞ்சா, ஜி. ஆர் கார் மனோரஞ்சன் ஆகிய 3 பார்வையாளர்களை அனுப்பி வைத்தது.

இவர்களோடு தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி. புதுவை, இந்திராகாங்கிரஸ் கட்சித் தலைவர் பி. சண்முகம், ஆகியோர் முதல்வர் புரட்சித்தலைவரைச் சந்தித்தனர்.

புதுவையில் அமைச்சரவை அமைப்பதுகுறித்து இவர்கள், முதல்வர் புரட்சித்தலைவரின் ஆலோசனையை பெற்றனர்.

இச்சந்திப்பிற்குப் பின் அஜித் பஞ்சா நிருபர்களிடம் கூறியதாவது:-

புதுவை அமைச்சரவையில், அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் இடம் பெறவிரும்புகிறதா என முதல்வர் எம். ஜி. ஆரிடம் கேட்டோம்.

முதல்வர் எம்.ஜி.ஆர். புதுவை அமைச்சரவையிலோ வேறு எத்தப் பதவியிலோ கழகம் இடம் பெறாது என தெரிவித்தார்.

புதுவையில் அமையும் இந்திரா காங்கிரஸ் அமைச்சரவைக்குஅனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் முழுஒத்துழைப்பு தரும் எனவும் முதல்வர் எம்.ஜி.ஆர்தெரிவித்தார்.

புதுவை மாநிலத்தின் வளர்ச்சிக்கு இந்திரா காங்கிரஸ்மற்றும் அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம் ஒன்றுபட்டு பணியாற்ற வேண்டும் எனவும், முதல்வர் எம். ஜி. ஆர். விருப்பம் தெரிவித்தார்.

இவ்வாறு அஜித்பஞ்சா கூறினார்.

முதல்வர் எம்.ஜி.ஆர். மிகவும் உற்சாகத்தோடு தங்களை வரவேற்று பேசியதாகவும் அஜித் பஞ்சா கூறினார்.



## அமைச்சர் கே. கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன் நிகழ்ச்சிகள்

மார்ச்- 15ந்தேதி சேப்பாக்கம் தொகுதி
16- புரசைப் பகுதி
21- எழும்பூர் பகுதி
22- ராயபுரம் பகுதி

## கோவில்பட்டி ஜெயச்சந்திரன் மகள் திருமணம்

திருநெல்வேலி, மார்ச் 9- கோவில்பட்டி ஜெயச்சந்திரனின் மகள் மணிமேகலைக்கும், மதுரை சந்திரசேகரனுக்கும் வரும் 17-ந்தேதி ஞாயிற்றுக் கிழமை காலை 10.30 மணி அளவில் கழக அவைத்தலைவர் ஈ. வெ. ஆ. வள்ளிமுத்து எம். எல். சி. தலைமையில் கோவில்பட்டியிலுள்ள மாவட்ட குடிசைத்தொழில் சிறு தீப்பெட்டி உற்பத்தியாளர்கள் சங்க திருமண மண்டபத்தில் திருமணம் நடை பெறுகிறது.

டெல்லி சிறப்பு பிரதிநிதிஜி. ஆர்.எட்மண்ட்வரவேற்புரை நிகழ்த்தும் இந்த மண விழாவை அமைச்சர் ஆர். எம். வீ. நடத்தி வைக்கிறார். அமைச்சர்கள் காளிமுத்து, யூசுப், சாத்தூர் ராமச்சந்திரன், சபாநாயகர் பி. எச். பாண்டியன், முன்னாள் அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் உள்ளிட்ட ஏராளமான கழக, மன்ற தோழர்கள் பங்கேற்று வாழ்த்திப் பேசுகின்றனர்.

# ஆளுநர் உரைக்கு அரசு ஊழியர்கள் அமோக பாராட்டு

**சென்னை, மார்ச். 9- ஆளுநர் உரையில் கூறப்பட்டுள்ள திட்டங்களை அரசு ஊழியர்கள் மகிழ்வுடன் வரவேற்றுள்ளனர்.**

இதுகுறித்து தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர்கூட்டணியின் மாநிலத் தலைவர் ராசவும், பொது செயலாளர் ஈஸ்வரனும் விடுத்துள்ள அறிக்கை வருமாறு:-

தமிழ்நாடு சட்டமன்றக் கூட்ட அவையில் தமிழக ஆளுநர் உரையில் அரசப் பணியாளர்களின் குடும்ப நலநிதியை ரூ. 10,000 என்பதை ரூபாய் இருபதினாயிரமாக உயர்த்தி வழங்கப்படும் என்ற அறிவிப்பை தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணி வரவேற்கிறது.

கல்விமேம்பாடுஅடைய ஒன்று முதல்எட்டு வகுப்பு வரை தகுதியுள்ளபிள்ளைகள் அனைவருக்கும் இலவசச் சீருடையும், இலவச பாடப்புத்தகமும்சேர்த்து வழங்கும் திட்டத்தினையும் ஆசிரியர் கூட்டணி வரவேற்கிறது.

தற்போது பல பள்ளிக் கட்டிடங்கள் மிகவும் பழுதடைந்துள்ளன. இப்படிப்பட்ட கட்டிடங்களை செம்மைப்படுத்தும் திட்டமும். அவசியமான இடங்களில் பள்ளிக்கட்டிடம் கட்ட நிதி ஒதுக்கீடு செய்யவும் வகை செய்யப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

சென்னையில் புதிதாக மருத்துவப்பல் கலைக் கழகம் தொடங்கும் செயல்பாடும் மற்ற மாநிலங்களுக்கு இது முன் மாதிரியாகும். இவ்வாறு அவர்கள் கூறியுள்ளனர்.

## தமிழக ஆசிரியர் கூட்டணி

ஆளுநர் உரையை வரவேற்று தமிழக ஆசிரியர் கூட்டணி சார்பில் அதன் பொதுச் செயலாளர் அ. சாமிநாதன் விடுத்துள்ள அறிக்கை வருமாறு:-

அரசு ஊழியர்களின் குடும்ப நலநிதியைரு.10 ஆயிரத்திலிருந்துரு.20 ஆயிரமாக உயர்த்த ஆளுநர் உரையில் குறிப்பிட்டிருப்பதை பெரிதும் வரவேற்கிறோம்.

1-வது வகுப்பு முதல் 8-வது வகுப்புவரை உள்ள ஏழைக் குழந்தைகளுக்கு இலவச புத்தகம், சீருடை வழங்கும் அற்புதத் திட்டத்தையும், மதிய உணவுவழங்கப்படும் 10 ஆயிரம் குழந்தைகள் நலமையத்தை பாலர் தொடக்கபள்ளியாக மாற்றவும், பழுதுபட்ட பள்ளி கட்டிடங்களைச் செப்பனிடவும், புதியபள்ளி கட்டிடங்கள் கட்ட நிதி ஒதுக்கவும் வகை செய்துள்ள ஆளுநர் உரையை தமிழக ஆசிரியர்கூட்டணிசார்பில் மனமார பாராட்டி வரவேற்கிறேன்.

இவ்வாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

## மாநகராட்சி ஊழியர்கள்

அரசு ஊழியர்களின் குடும்பநல நிதியை ரூ. 10 ஆயிரத்திலிருந்து 20 ஆயிரமாக உயர்த்த கவர்னர் உரையில் குறிப்பிட்ட முதல்வர் புரட்சித் தலைவர் அரசுக்குநன்றியையும்பாராட்டையும்தெரிவிப்பதாகமாநகராட்சி அண்ணா பொது ஊழியர் சங்க செயலர் பிரம்பை சண்முகம் தெரிவித்துள்ளார்.

## இந்திரா படம்...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

தெரிவித்து இரண்டு நிமிடம் மவுனம் கடைபிடிக்கப்பட்டது.

இந்த மூவரின் மறைவு குறித்த இரங்கல் தீர்மானத்தைமேலவை முன்னவரும் செய்தித்துறை அமைச்சருமான ஆர். எம். வீ முன்மொழிந்தார்.

"நம்முடைய வாழ்நாளில் பிரதமர் இந்திரா காந்தியின் மறைவுபெரும் இழப்பாகும். இப்படிப்பட்ட பேரிழப்பை நாம் இதுவரை சந்தித்ததில்லை" என்று குறிப்பிட்டார்.

இந்திராகாந்தி அம்மையார் தமது ஆட்சியின் போது இந்தியா உணவில் தன்னிறைவு பெறும் வகையில்சிறப்பாக ஆட்சி செய்தார். அது மட்டுமின்றி வங்கிகளை இந்திரா அம்மையார் தேசிய உடைமை ஆக்கியதால் இன்றைக்கு கிராமங்களில் வங்கிகள் ஏழைகளுக்கு உதவி செய்கின்றன என்றும் அமைச்சர் ஆர்.எம்.வீ. குறிப்பிட்டார்

அவசர நிலைசட்டம் கொண்டுவந்த போது அதனால் நாட்டில்பல நன்மைகள் ஏற்பட்டன. இதை பலர் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள் என்று பேசிய அமைச்சர் ஆர். எம். வீ. அவசர நிலையின் போது ஏற்பட்ட சில தவறுகளுக்கான பொறுப்பை இந்திராஏற்றுக்கொண்டார் என்றார்.

## ராஜீவுக்கு பாராட்டு

இந்திராகாந்தியை வீழ்த்திவிட்டால் இந்தியாவை வளைத்து விடலாம் என்று கருதினார்கள். அந்த நிலை ஏற்படாமல் பிரதமர் ராஜீவ் பொறுப்பேற்று செயல்படுத்தி கொண்டிருக்கிறார்.

இந்திராவின்மறைவுக்கு சபையின் ஆழ்ந்த இரங்கலை அவர் தம் புதல்வர் ராஜீவிற்குதெரிவிப்பதாக அமைச்சர் ஆர். எம். வீ குறிப்பிட்டார்.

இந்திராவின் மறைவுக்கு இரங்கல் தெரிவித்து மேலவைத் தலைவை ம. பொ. சி. துணைத் தலைவர் ஜி.சுவாமிநாதன் இந்திராகாங்கிரசைச் சேர்ந்த எம். பி. சுப்பிரமணியம், தி. மு. க. வைச் சேர்ந்த சாதிக்பாட்சா இந்தியகம்யூனிஸ்டு கட்சியை சேர்ந்த பி.மாணிக்கம் ஆகியோர் பேசினர். பின்னர் சபையில் இரங்கல்தீர்மானம் நிறை வேற்றப்பட்டது.

மேலவைத் தலைவர் ம. பொ. சியின் இரங்கலுரைக்கு பின்னர்சபையில்2 நிமிடம் இந்திராகாந்தியின் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில் மவுன அஞ்சலி செலுத்தப்பட்டது.

அதன் பின்னர் மேலவை ஒத்திவைக்கப்பட்டது.

மேலவை மீண்டும் 14-ந் தேதி காலை 10மணிக்குக் கூடும்.

சட்ட சபையில்

# மதுரை முத்து கோசல்ராம் மறைவுக்கு இரங்கல்

**சென்னை, மார்ச் 9- மதுரை முத்து, கே. டி.கோசல்ராம் மற்றும் இயற்கை எய்திய முன்னாள் சட்ட மன்ற உறுப்பினர்களுக்கு தமிழக சட்ட சபை இன்று அனுதாபம் தெரிவித்தது.**

தமிழக சட்ட சபையில் முன்னாள் உறுப்பினர்களாக இருந்து மறைந்தவர்களுக்கு இன்று காலை இரங்கல் தெரிவித்துசட்ட சபையில் தீர்மானம்நிறைவேறியது.

சட்டசபையில் முன்பு உறுப்பினர்களாக இருந்த சிவராமன் அம்பலம், டாக்டர் திருமதி சௌந்தரம் ராமச்சந்திரன், புல்லாரெட்டி, ஜி.செல்வபதிசெட்டியார், எஸ்.எம் துரைராஜ், கே. டி. கோசல்ராம், ராசாராம் நாயுடு, எஸ். என். அண்ணாமலை ஆகியோர் மறைவுக்கும் தற்போதைய சட்டமன்றத்துக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட மறைந்த திருப்பத்தூர் சண்முகத்துக்கும் சட்டமன்ற மேலவை உறுப்பினராக இருந்தபோது மரணம் அடைந்த மதுரைமுத்தண்ணன் மறைவுக்கும் சட்டப் பேரவை இரங்கல்தெரிவித்து2 நிமிடம் மவுன அஞ்சலிசெலுத்தியது.

இந்த இரங்கல் தீர்மானத்தைத் சபாநாயகர்பி.எச்.பாண்டியன் கொண்டு வந்தார்.

# நாவலர் புகழஞ்சலி...

(முதற் பக்கத் தொடர்ச்சி)

தார்.

நாட்டில்பஞ்சாப் கலவரம் ஏற்பட்டபோது தீவிரவாதிகளின் நடவடிக்கை இந்தியாவின்பெருமையை குலைத்து விடுமோ என்று அஞ்சிய நேரத்திலும் பலர்இன்னும் ஏன்இதற்கு நடவடிக்கை எடுக்காமல் இருக்கிறார்கள் என்று எண்ணிய நேரத்திலும், பேச்சு வார்த்தை பயன் அளிக்காத நிலையில் பொற்கோவிலுக்குள் ராணுவத்தை கொண்டு சென்று கலவரக்காரர்களை அடக்கி செயல்பட்ட காரணத்தால்எதிர் கட்சித் தலைவர்களாலும் உலகத் தலைவர்களாலும் இந்திராகாந்தி பாராட்டப்பட்டார்பொற்கோவிலுக்குள் ராணுவத்தை தமிழகத்தை சேர்ந்த சுந்தர்ஜி என்பவர் தலைமையில் கொண்டு சென்று கலவரக்காரர்களை அடக்கினார்.

இந்திராகாந்தி அம்மையார்தனக்குஆபத்து வந்து சேரும் என்று தெரிந்தும் கூட அஞ்சாமல் செயல்பட்டார்.

## இந்திராவின் உறுதி

அக்டோபர் 31ந்தேதி அவர் சுட்டுக் கொல்லப்பட்டார் என்றாலும் அதற்கு முந்தினம் புவனேஸ்வரத்தில் நடைபெற்ற ஒரு கூட்டத்தில் தனது மனத்தை உறுதிக் கொண்டிருந்த கருத்தை வெளியிட்டார். "நாட்டுக்காகப் பணியாற்றும் போது நான் இறக்க நேரிட்டாலும் என்னுடைய ஒவ்வொரு சொட்டு ரத்தமும் நாட்டுக் காகவே பயன்படுமென்று" அப்போது குறிப்பிட்டார்.

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் உடல் நலமின்றி அப்பல்லோ மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டிருந்த போது அடிக்கடி தொலைபேசி மூலம்தொடர்பு கொண்டு முதல்வரின்உடல்நிலையைப் பற்றி ஆவலோடு கேட்ட இந்திரா காந்தி அம்மையார் முதல்வரை சந்திப்பதற்கென்றே உடனே ஓடோடி வந்து அவரைசந்தித்துமுதல்வர் விரைவில் உடல் நலம் பெற வேண்டுமென்பதில் ஆர்வம் காட்டினார்.

முதல்வர் உடல் நலம் பெறஎத்தகைய உதவியை செய்வதற்கும் இந்திய அரசு தயாராக இருக்கிறது என்று தெரிவித்து அவைகளை செய்தார்.

மறைந்த இந்திரா காந்தி அம்மையாருக்கும், அவர் மகன் ராஜீவ் காந்திக்கும் தமிழக அரசு நன்றிக்கடன் செலுத்த கடமைப்பட்டிருக்கிறது.

## தியாகச் சுடர்

எரிந்து கொண்டிருக்கிற ஒரு மழுகுவர்த்தி எரியாமல் இருக்கிற பல்லாயிரம் மெழுகுவர்த்திகளைஎரியவைத்துதானும் எரிந்து ஒளியைத்தருவது போல இந்திரா அம்மையாரின் தியாகம் விளங்கியது.

இந்தியாவின் ஜனநாயகம்காப்பாற்றப்படஅவர் விட்டுச்சென்ற பணியை- நோக்கத்தைநிறைவேற்ற நாம் அனைவரும் பாடுபடுவோம்,

இவ்வாறு டாக்டர் நாவலர் கூறினார்.

தொடர்ந்து எதிர்க் கட்சித் தலைவர் உ சுப்பிரமணியம் இந்திரா மறைவுக்கு இரங்கல் தெரிவித்து பேசினார்.

எதிர்க் கட்சித்தலைவர் உ.சுப்பிரமணியம், அன்பழகன் (தி.மு.க.) ரமணி (மார்க்ஸிய கம்யூனிஸ்ட்டு) ஏ. எஸ், ஏ. ஆறுமுகம் (ஜனதா) உத்திராபதி (கம்யூனிஸ்ட்), அப்துல் சமது (மு.லீக்) குமரி அனந்தன் (கா. கா தே.கா) ஆகியோர்பேசினர் அதன்பின் அவைமுன்னவர் நாவலர் எழுந்து ஒருஅறிவிப்பை வெளியிட்டார்.

அதன்பின் சபை உறுப்பினர்கள் அனைவரும் 2 நிமிடம் எழுந்து நின்று இந்திரா காந்திக்கு அஞ்சலி செலுத்தினர்.

மறைந்த இந்திரா காந்திக்குஅஞ்சலி செலுத்தும்வகையில்சபைநிகழ்ச்சிகளை இத்துடன் ஒத்திவைப்பதாகவும் சபை மீண்டும் 11 ந் தேதி காலை 9 மணிக்கு கூடும் என்றும் சபாநாயகர் அறிவித்தார்.

இரங்கல் தீர்மானம் நிறைவேற்றும் நிகழ்ச்சியின் போது முதல்வர் புரட்சித் தலைவர் சபையில் சோகமே உருவாக அமர்ந்திருந்தார்.

## அமைச்சர் ராமசாமிக்கு பாராட்டுக் கூட்டம்

சென்னை. மார்ச் 9— மறுவாழ்வுத் துறை அமைச்சர் டி,ராமசாமிக்கு பெரம்பூரில் இன்று (9,ந் தேதி) மாலை பாராட்டுக் கூட்டம் சந்திரயோகியில் நடைபெறுகிறது.

அமைச்சரை பாராட்டி குடிசை மாற்று வாரியத் தலைவர் என். வி. என். செல்வம், மதுசூதனன், எம்.எல்.சி., மணிமாறன் குணசேகரன், செல்லமூர்த்தி, சி. ஜெயபால், சாலமன், ஓமப்பொடி பிரசாத், கோ.முனுசாமி, துரைராஜ், மற்றும் பலர் பேசுகின்றனர். பிரம்பை சண்முகம் நன்றி கூறுகிறார்.

## நாகை துப்பாக்கி சூடு பற்றி விசாரணை

தஞ்சை, மார்ச் 9- நாகை அடுத்த நாகூரில் கஸ்டம்ஸ் அதிகாரிகள் நடத்திய துப்பாக்கிச்சூடு பற்றி நாகை ஆர். டி. ஓ. விசாரணை நடத்துவார் என அறிவிக்கப்பட்டுள்ளது.



## நினைவு அஞ்சலி

சென்னை, மார்ச் 9— "அண்ணா" நாளிதழ் அச்சகப் பிரிவில் பணி புரியும் டி. சம்பந்தத்தின் இளைய சகோதரர் டி. வேணுகோபால் செட்டியார் ஸ்பெஷல் அசிஸ்டண்ட், (ரிடையர்ட்), கர்நாடகாபாங்க், அண்ணா நகர், சென்னை-40 22-2-85 அன்று இயற்கை யெய்தியதை முன்னிட்டு, சென்னை மண்ணடி, செங்கழுநீர் பிள்ளையார் கோவில் தெருவிலுள்ள, அத்திப்பட்டான் குளக்கரையில் 10-3-85 காலை 10 மணிக்கு நினைவு அஞ்சலி சடங்குகள் நடைபெறும்.

மத்திய அரசு உதவி:

## ராமநாதபுரம் நகரை அழகுபடுத்த ரூ. 1 கோடி

மதுரை. மார்ச் 9- இராமநாதபுரத்தை அழகுபடுத்த மத்திய அரசு அனுமதி அளித்துள்ளது. மத்திய அரசின் நகர அபிவிருத்தி குழுவினர் பெரிய நகரங்களை அழகுபடுத்த கோடிக்கணக்கான ரூபாய் செலவில் திட்டங்களை தீட்டிவருகின்றனர்.

இந்த ஆண்டு இராமநாதபுரம் நகரை அழகுபடுத்த 1 கோடி ரூபாயை மத்திய அரசு ஒதுக்கிஅனுமதியும் அளித்துள்ளது.

இதையொட்டி அபிவிருத்தி திட்டங்களை தயாரிக்கும்படி நகரசபைக்கு இராமநாதபுரம் மாவட்டஆட்சித்தலைவர் எஸ். குருமூர்த்தி உத்தரவிட்டுள்ளார்.

நகரசபைஆணையாளர் அதிகாரிகளுடன் நகர சீரமைப்பு திட்டத்தை தயாரித்து வருகின்றார். இந்த திட்டத்தை யொட்டி இராமநாதபுரத்தில்நவீன பஸ்நிலையம், பூங்காக்கள் பாதாளசாக்கடைதிட்டம் ஆகியவை அமைக்க திட்டமிடப்பட்டுள்ளது. இது சம்பந்தமாக பணிகள் விரைவாக நடைபெற்று வருகின்றன.

# அமைச்சர் சவுந்தரராசன் நிகழ்ச்சிகள்

மார்ச் 12ந் தேதி சேப்பாக்கம் பகுதி
13- துறைமுகம் பகுதி
15- எம்.ஜி.ஆர். நகர்
18- தி.நகர்
19- ராதாகிருஷ்ணன் நகர்
20- புரசைத் தொகுதி
21- பெரம்பூர் தொகுதி
23- பூங்காநகர் தொகுதி
25- ராதாகிருஷ்ணநகர்
26- எழும்பூர்தொகுதி
28- அண்ணாநகர் தொகுதி



## தோல்விகளால் துவண்டு வாழ்க்கையே சாரமற்றுப்போனவர்களின் வாதங்கள் தூள்! தூள்!!

## "ஆளுநர் உரை உப்புச்சப்பற்றது" என்று உதவாக்கரை வாதம் பேசிய உன்மத்தர்களுக்கு இதோ பதில்!

- இலவச சீருடை - பாட புத்தகத்திட்டம் குழந்தைகள் தொடர்ந்து படிக்க உதவும் சேமநல திட்டம்
- தொழில் வளர்ச்சிக்கான புதிய திட்டங்கள் பயனளிக்கக்கூடியது

## ஏழைகளின் ஏந்தல் புரட்சித்தலைவர் அரசு

## தயாரித்த ஆளுநர் உரைக்கு

# ஏடுகள் பாராட்டு

**சென்னை, மார்ச் 9- ஆளுநர் உரை உப்புச்சப்பற்றது என்று உதவாக்கரை வாதம் பேசிய சில எதிர்க்கட்சியினரின், நெஞ்சிலாத - சிந்தனையற்ற வாதங்களைத் தூள் தூளாக்கும் விதத்தில் ஏடுகள் பல ஆளுநர் உரையைப் பாராட் டியுள்ளன.**

புரட்சித்தலைவர் அரசின் சிறந்த திட்டங்களை சட்டசபையில் ஆளுநர் உரை நாட்டு மக்களுக்குத் தெளிவு படுத்தியுள்ளது அல்லவா?

ஆளுநர் உரை குறித்து 'தினமணி' தலையங்கத்தில் ஏழை, எளிய மக்களின் முன்னேற்றத்திற்கும், தாழ்த்தப் பட்டோரின் துயரைத் துடைப்பதற்கு வறுமையையும், வேலையின்மையையும் நீக்குவதற்கும் மேற் கொண்டுள்ள உறுதிமொழியைத் தொடர்ந்துநிறைவேற்றப் பாடுபடும் என்று உறுதி கூறப்பட்டுள்ளது" என்று பாராட்டியிருக்கிறது.

இலங்கைவாழ் தமிழர்கள் படும் துயரம் பற்றி கவர்னர் குறிப்பிட்டு கவலை தெரிவித்தது மாநில மக்களின் கருத்தினைப் பிரதிபலிக்கிறது என்றும் "தினமணி" கருத்துத் தெரிவித்திருக்கிறது.

நெல்கொள்முதலில் அரசு நல்ல சாதனை கண்டிருப்பதால் வரும் ஆண்டில் பொது விநியோக முறையை செயல்படுத்துவதில் அரசு தன் பொறுப்பினை சரிவர நிறைவேற்ற முடியும் என்றும் அந்த தலையங்கம் குறிப்பிட்டுள்ளது.

மத்திய அரசுடன் தொடர்பு கொண்டு விரைவில் தொழில் லைசென்ஸ் பெறுவதற்காக டில்லியில் தொடர்பு அதிகாரி ஒருவரை நியமிக்க திட்டமிடுவதாக தொழில்துறை அமைச்சர் ராசாராம் தெரிவித்துள்ளது பயனுள்ள நடவடிக்கை என்றும் குறிப்பிடப் பட்டுள்ளது.

தொழிலாளர் இழப்பு ஈட்டுத் தொகை ரூ. 5 ஆயிரத்திலிருந்து ரூ.10 ஆயிரம் ஆக உயர்த்தப்படும் என்ற அறிவிப்பும் வரவேற்கப்படும் என்று "தினமணி" கூறுகிறது.

பள்ளிப் பிள்ளைகளுக்கு இலவசச் சீருடைகளும் புத்தகங்களும் வழங்கும் திட்டம் சேமநல திட்டம் என்று வரவேற்கப்படும். பள்ளிக்கூடங்களில் மாணவர்கள் பாதியிலேயே விட்டுப் போகாமல் தொடர்ந்து படிப்பதற்குஇந்ததிட்டங்கள் ஊக்கம் அளிக்கும் என்று "தினமலர்" பாராட்டியுள்ளது.

### 'இந்து'

'இந்து' ஏடுதனதுதலையங்கத்தில்அரசுநிர்வாகம் மேலும் முனைப்புடன் செயல்படுவது குறித்து குறிப்பிட்டுள்ளது.

தேர்தலில் மக்கள் நம்பிக்கையைப் பெற முக்கிய காரணங்களில் ஒன்றாக இருந்த சில அறிவிப்புகளும் ஆளுநர் உரையில் திட்டங்களாக அறிவிக்கப்பட்டுள்ளன என்று குறிப்பிட்டுள்ளது.

அரசு ஊழியர்க்கு குடும்பநலத் திட்டம் தொழிலாளர்களுக்கு இழப்பீட்டுத் திட்டம் ஆகியவை அரசின் சிறந்த செயல்பாட்டை பிரதிபலிப்பதாக உள்ளன.

இதே போல் பள்ளிக் குழந்தைகளுக்குஇலவச சீருடை, புத்தகங்கள் வழங்கும் திட்டமும் சிறந்ததாகும் என்று 'இந்து' கூறுகிறது.

நிதிக்கமிஷன் பாரபட்சம் காட்டக்கூடாது உரிய பங்கைத் தர வேண்டும் என்று ஆளுநர் உரையில் அரசு கேட்டுக் கொண்டிருப்பதையும், "இந்து" தலையங்கம் சுட்டிக் காட்டியுள்ளது.

# புரட்சித்தலைவரை சந்தித்தார் சிவாஜி

## உணர்ச்சிப் பரவசம்

**சென்னை, மார்ச் 9- முதல்வர் புரட்சித்தலைவரை சிவாஜிகணேசன் தமது குடும்பத்தினருடன் சென்று சந்தித்து உரையாடினார். முதல்வர் புரட்சித்தலைவரைச் சந்தித்ததும் உணர்ச்சிப் பரவசப்பட்டு மெய்மறந்து காணப்பட்டார் சிவாஜி.**





அமெரிக்காவிலிருந்து சிகிச்சைபெற்று திரும்பிய பிறகு முதல்வர் புரட்சித் தலைவரை சிவாஜிகணேசன் சந்திப்பது இதுவே முதல் தடவையாகும்.

ராமாவரம் தோட்டத்திலுள்ள முதல்வரின் வீட்டில் இந்த சந்திப்பு நடைபெற்றது.

சிவாஜிகணேசன் தன்னுடன் மனைவி கமலா அம்மாள் மகன்கள், தளபதி ராம்குமார், பிரபு, ஆகியோரையும் அழைத்துச் சென்றிருந்தார்.

முதல்வர் உடல் நலம் குறித்து சிவாஜிகணேசன் விசாரித்தார்.

இருவரும் 25 நிமிடம் பேசிக்கொண்டிருந்தனர் தற்போதுள்ள அரசியல் நிலவரம் குறித்தும் அவர்கள் விவாதித்தனர்.

சமீபத்தில் நடந்து முடிந்த தேர்தலில் கழகம் - இந்திரா காங்கிரஸ் கூட்டணியின் வெற்றிக்காக சிவாஜி கணேசன் சூறாவளி சுற்றுப்பயணம்செய்தார்.

இதற்காக சிவாஜி கணேசனுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் நன்றி கூறி, கட்டித்தழுவி தமது மகிழ்ச்சியை தெரிவித்து கொண்டார்.



# குஜராத் ஐகோர்ட் தலைமை நீதிபதியாக பி. ஆர். கோகுலகிருஷ்ணன் நியமனம்

சென்னை, மார்ச் 9— குஜராத் மாநில உயர்நீதிமன்ற தலைமை நீதிபதியாக சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி பி. ஆர். கோகுலகிருஷ்ணன் நியமிக்கப்பட்டுள்ளார்.

சென்னை உயர்நீதிமன்ற நீதிபதியாக பி. ஆர். கோகுலகிருஷ்ணன் இருந்து வருகிறார். சென்னை உயர்நீதிமன்ற நீதிபதிகளிலேயே மூத்த நீதிபதியாக இவர்விளங்கி வருகிறார்.

சென்னை உயர்த்திமன்றத்தில் கடந்த 16 ஆண்டு காலமாக இவர் நீதிபதியாக பணியாற்றி வருகிறார்.

தற்போது அவருக்கு தலைமை நீதிபதியாக பதவி உயர்வு அளிக்கப்பட்டுள்ளது.

குஜராத் மாநில உயர் நீதிமன்ற தலைமை நீதிபதியாக பி.ஆர்.கோகுல கிருஷ்ணன் நியமிக்கப்பட்டுள்ளார்.

இதற்கான உத்தரவை நேற்று இரவு மத்திய சட்ட இலாகா பிறப்பித்தது.

விரைவில் குஜராத் மாநிலத் தலைமை நீதிபதியாக இவர் பதவி ஏற்பார்.






Edited and Published by .RAVINDRAN on behalf of Thangaman Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road MADRAS-600029

# சிக்கிம் முதல்வராக பண்டாரி பதவி ஏற்பு

புதுடெல்லி, மார்ச் 9— சிக்கிம் மாநில முதல்வராக பகதூர் பண்டாரி நேற்று பதவி ஏற்றார். அவருடன் 10 புதிய மந்திரிகளும் பதவி ஏற்றனர்.

சிக்கிம் மாநிலத்தில் நடந்துமுடிந்த தேர்தலில் பண்டாரியின் கட்சியான 'சிக்கிம் சங்கராம்பரிஷத்' மொத்தம் 28 இடங்களில் 27இடங்களை கைப்பற்றி வெற்றி பெற்றது. பண்டாரி முன்பு இந்திராகாங்கிரசில் இருந்தவர்.

அக்கட்சியிலிருந்துஅவர் டிஸ்மிஸ் செய்யப்பட்டதைத் தொடர்ந்து அவர் இந்த புதிய கட்சியை துவக்கி ஆட்சியை பிடித்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

# கடலூர் படகுவிபத்து: பிரதமர் ராஜீவ்காந்தி அனுதாபம்

## இறந்தோர் குடும்பத்தினருக்கு தமிழக அரசு தலா ரூ. 2 ஆயிரம் உதவி

புதுடெல்லி, மார்ச், 9. கடலூரில் நடந்த படகு விபத்தில் இறந்தவர்களின் குடும்பங்களுக்கு பிரதமர் ராஜீவ்காந்தி தனது ஆழ்ந்த துயரத்தை தெரிவித்துள்ளார்.

கடலூர் அருகே கடலில் ஒரு கப்பல் மூழ்கி விட்டது. இதைப் பார்ப்பதற்காக 70 பேர் ஒரு படகில் சென்றனர்.

அந்தபடகு திடீரென்று கவிழ்ந்ததில் அதில்பயணம் செய்த 51 பேர் கடலில் மூழ்கி இறந்தனர். சாவு எண்ணிக்கை மேலும் உயரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

படகு விபத்தில் பலியானவர்களின் குடும்பங்களுக்கு பிரதமர் ராஜீவ் தனது ஆழந்த துயரத்தை தெரிவித்துள்ளார்,

இது குறித்து அவர் அனுப்பிய துயரச் செய்தியில் கூறியுள்ளதாவது:-

கடலூரில் நடந்த படகு விபத்தில் ஏராளமானவர்கள் கடலில் மூழ்கி உயிர் இழந்தனர் என்ற தகவலை கேட்டதும் மிகுந்ததுயரம் அடைந்தேன்.

இந்த வேதனையில் துடிக்கும் குடும்பங்களுக்கு எனது ஆழ்ந்த இரங்கலை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு அந்த செய்தியில் கூறப்பட்டுள்ளது.

கடலூர் படகு விபத்தில் இறந்தோர் குடும்பத்தினருக்கு தலா 2 ஆயிரம் ரூபாய் வீதம் தமிழக அரசு உடனடியாகவழங்க உத்தரவிட்டுள்ளது.

## தமிழ்நாடு நுகர் பொருள் வாணிபக் கழகம்.

புதுக்கோட்டைமண்டலம்

மண்டல மேலாளர், தமிழ்நாடு நுகர் பொருள் வாணிபக் கழகம், மேல 3 ம் விதி புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள தமிழ்நாடு நுகர் பொருள் வாணிபக் கழக திட்டங்கள், அமுதம் அங்காடிகள், நெல் கொள்முதல் நிலையங்கள் மற்றும் தொடர்புள்ள கிட்டங்கிகளிலிருந்து சீனி, அரிசி, நெல், மற்றும் கையாளப்படும் பொருட்கள் யாவற்றையும் ஒரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு அனுப்பவும், எடுத்து வரவும், 85-86ம் ஆண்டிற்கான மூடி முத்திரையிட்ட ஒப்பந்தப் புள்ளிகள் 15-3-85 மாலை 3 மணிக்குள் இவ்வலுவலகத்தில் பெற்றுக் கொள்ளப்படும். டெண்டர் கொடுக்க விரும்புவோர் குறைந்தது ஐந்து லாரிகளுக்கு குறையாத லாரி சொந்தக்காராக இருக்க வேண்டும். அவ்வாறு தான் லாரிகளைஉடையவர் என்பதற்கான பதிவுச் சான்றிதழ்களை அலுவலகத்தில் டெண்டர் பிரிக்கும் போது காட்டப் வேண்டும். இல்லையேல் டெண்டரில் கலந்துகொள்ள அருகதையற்றவர்களாகிறார்கள். ஒவ்வொரு டெண்டரரும் ரூ. 2,000/- இரண்டாயிரத்துக்கான டேவணித் தொகையை புதுக்கோட்டையில் பெறத்தக்க வகையில் செலுத்தி டெண்டருடன் இணைக்க வேண்டும். இது தொடர்பான விபரங்கள் அடங்கிய படிவத்தினை இவ்வலுவலகத்தில் ரூ. 5 செலுத்திப் பெற்றுக்கொள்ளலாம்.

மண்டல மேலாளர்

டி.ஐ.பி.ஆர், எம்.ஏ.சி.

## மீன்துறை

மீன்பிடி துறைமுக திட்டங்கள் வட்டம் நாகர்கோவில்

# மறு ஒப்பந்தப்புள்ளி அறிக்கை

எண்: வ1/6094/83 நாள்: 22-2-1985

தமிழ்நாடு ஆளுநருக்காகவும் அவர்கள் சார்பிலும் கீழ்க்கண்ட வேலைக்கான மூடி முத்திரையிடப்பட்ட ஒப்பந்தப்புள்ளிகளை பொருத்தமான வகுப்பில் பதிவு பெற்றுள்ள ஒப்பந்தக்காரர்களிடமிருந்து கண்காணிப்புப் பொறியாளர், மீன்பிடி துறைமுகதிட்டங்கள்வட்டம், நாகர்கோவில் அவர்களால் 27-3-85 மாலை 3.00மணிவரை பெற்றுக்கொள்ளப்பட்டு அன்று மாலை 3.30 மணி அளவில் அங்கு அச்சமயம் ஆஜராகியுள்ள ஒப்பந்தக்காரர்கள் முன்னிலையில் திறக்கப்படும். கடைசி தேதி ஒரு பொது விடுமுறை நாளாக இருந்தால் அடுத்த வேலை நாளில் மேற்சொன்ன நேரத்தில் பெற்று திறக்கப்படும்.

| வ. எண் | வேலையின் பெயர் | டெண்டர் கொடுக்க தகுதி வாய்ந்த ஒப்பந்தக் காரரின் வகுப்பு | வேலை முடிக்க வேண்டிய காலம் | டேவணித் தொகை ரூ |
|---|---|---|---|---|
| 1. | பெரியார் மாவட்டம் பவானி சாகரில் மீன்துறை அலுவலக கட்டிடம் கட்டுதல். | இரண்டாம் வகுப்பும் அதற்கு மேலும் | நான்கு மாதம் | 3,600/- |
| 2. | பெரியார் மாவட்டம் பவானி சாகரில் காவலர்களுக்கு 4 குடியிருப்புகள் கட்டுதல். | இரண்டாம் வகுப்பும் அதற்கு மேலும் | மூன்று மாதம் | 1,300/- |
| 3. | பெரியார் மாவட்டம் பவானி சாகரில் மீனவர்களுக்கு 5 இரட்டைகுடியிருப்புகள் கட்டுதல். | இரண்டாம் வகுப்பும் அதற்கு மேலும் | மூன்று மாதம் | 3,100/- |
| 4. | பெரியார் மாவட்டம் பவானி சாகரில் 60 மீன் வளர்ப்பு தொட்டிகள்கட்டுதல். | முதல் வகுப்பும் அதற்கு மேலும் | ஒன்பது மாதம் | 14,000/- |

டெண்டர் ஷெட்யூல் விலை: வரிசை எண் 1, 2, 3, ஆகிய ஒவ்வொன்றுக்கும் ரூ. 50-00 வரிசை எண் 4 க்கு ரூ.100-00

எஸ்ஸி மற்றும் எஸ்டி: வரிசை எண் 1, 2,03 ஆகியஒவ்வொன்றுக்கும் ரூ. 2. 75 வரிசை எண் 4 க்குரூ .5. 5,

டேவணித்தொகை யார் கணக்கில் செலுத்துவது (ஒவ்வொருவேலைக்கும்): செயற் பொறியாளர் மீன்பிடி துறைமுக திட்டக் கோட்டம் பவானிசாகர் பெரியார் மாவட்டம்

டெண்டர் ஷெடியூலின் விலை எக்காரணத்தை முன்னிட்டும் திரும்ப தரப்படமாட்டாது. பணம் கருவூல செலான் மூலமாகவோ அல்லது ஷெடியூல்டு வங்கியின் டிமாண்ட் டிராப்ட் மூலமாகவோ செலுத்தப்பட வேண்டும். Head Of Account: "112 A. D. Fisheries. Other Receipts - 11 Miscellaneous (112 A AD A 1107) amount To be Remitted Towards Sales Tax 040 - Sales Tax.

டெண்டர் ஷெடியூல் கண்காணிப்புப் பொறியாளர், மீன்பிடிதுறைமுக திட்டங்கள் வட்டம், நாகர்கோவில் அலுவலகத்தில் 15-3-85 முதல் எல்லா வேலை நாட்களிலும் கண்காணிப்புப் பொறியாளரால் அங்கீகரிக்கப்பட்ட செலான் மூலம் நேரிலும் தபால் மூலமும் பெற்றுக் கொள்ளலாம். டெண்டர் ஷெடியூலுக்கான விண்ணப்பம் அனுப்ப கடைசி நாள் 25-3-85 அதன் பின்வரும் விண்ணப்பங்கள் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

டெண்டர் ஷெடியூல் தபால் மூலம் அனுப்பப்படும் … ஏற்படும் காலதாமதம் அல்லது இழப்பிற்கு … பொறுப்பேற்காது. தபால்மூலம் டெண்டர் ஷெடி… பெற்றுக்கொள்ள கூடுதலாக ரூ. 10- க்கு சலு… கட்டி அனுப்ப வேண்டும். டெண்டர் ஷெடி… இந்த வட்டத்தில் பதிவுபெற்ற ஒப்பந்தக்கார…ருக்கு மட்டும் தான் வழங்கப்படும்.

…வ்வித காரணமும் காட்டாமல் பெற்றுக்கொள்ளும் எந்தஒரு அல்லது அனைத்து டெண்டர்களையும் நிராகரிக்க கண்காணிப்புப் பொறியாளர் அவர்களுக்கு உரிமை உண்டு.

மேலும் தகவல்களுக்கு எல்லா அலுவலக வேலை நாட்களிலும் இவ்வலுவலகத்தில் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.

மேற்பார்வை பொறியாளர்

நாகர்கோவில் - 629 001

டிஐபிஆர்-9105/85-2/ஏரீஸ்